உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உபநிடதம்.



கருணாகரசுவாமிகளால்

இயற்றப்பட்டு

திருத்துருத்தி இந்திரபீடம்

கரபாத்திரசுவாமிகள்

ஆதீனத்துக்குரிய

ஈசூர் - சச்சிதானந்தசுவாமிகளால்

இயற்றப்பட்ட

விருத்தியுரையுடன்



அத்துவிதசபைக்காக

ஷை சபையின்காரியதரிசி

ப. முத்துகிருஷ்ண ரெட்டியாரால்



சை. இரத்தினசெட்டியார் அவர்களது

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1889

*Copyright-Registered.*

இதன்விலை அணா-௫.

கடவுள் துணை.

# புத்தகவிளம்பரம்.

இதனாலறிவிப்பது யாதெனின், இதனடியிற்கண்டுள்ள புத்தகங்கள் வேண்டுவோர், சென்னை ஜெனரல்போஸ்டாபீஸ் ஹெட்கிளார்க்கு ம-ா-ா-ஸ்ரீ, கோ. துரைசாமிநாயுடு அவர்களிடத்தில் பெற்றுக் கொள்ளலாம். வெளிநாட்டார் ஷை யாருக்கு முன்பண மனுப்பாமலே வாலியூ பேயெபில் போஸ்டிலேயே பெற்றுக்கொள்ளலாம்.

## அச்சிட்டிருக்கும் நூல்கள்.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பிரபுலிங்கலீலை மூலமும் உரையும் காப்பி 1-க்கு | 2 | 8 | 0 |
| சுவானுபூதிவிளக்கம், சீவகாருணியவிளக்கம் ... | 0 | 6 | 0 |
| உபநிடத விருத்தியுரை ... ... | 0 | 5 | 0 |
| வேதாந்த சூளாமணி உரை ... ... | 2 | 0 | 0 |
| தசகாரிய மகாவாக்கியவுரை ... ... | 0 | 8 | 0 |
| திருக்குத்திரிசிய விவேகவுரை ... ... | 1 | 0 | 0 |
| உத்தமவாதம் ... ... ... | 0 | 8 | 0 |
| கைவல்லிய நவநீத விருத்தியுரை (2nd Edition in the Press.) ... ... .. | 1 | 4 | 0 |
| சர்வமதசித்தாந்த விளக்கவினாவிடை. ... | 1 | 0 | 0 |
| தத்துவவிஜானுபோகசாரம் (முதல்வால்யம்) ... | 2 | 0 | 0 |
| சுகர் கைவல்லியம் ... ... ... | 0 | 2 | 0 |
| சொரூபசார மூலம் ... ... ... | 0 | 2 | 0 |
| பிரத்தியக்ஷானுபூதிவிளக்கம் ... ... | 2 | 10 | 0 |
| சசிவன்னபோதவுரை ... ... ... | 0 | 8 | 0 |
| எதார்த்தவாதம் ... ... ... | 0 | 4 | 0 |
| சொரூபசாரம் மூலமும், உரையும் ... ... | 0 | 8 | 0 |

## இனியச்சிடப்படும் நூல்கள்.

பகவற்கீதைவிருத்தியுரை.

வேதாந்த இலக்கணவுரை.

# சாத்துகவிகள்.

சென்னைச்சருவகலாசாலைத்தமிழ்த்தலைமைப்
புலமைநடாத்திய
இயற்றமிழாசிரியர்
கோமளபுரம். இராசகோபாலபிள்ளையவர்கள்
செய்த

(எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

திராவிடச்செஞ்சொ லுபநிடச் செய்யுட்டெரிப்பரும்
பொருடெரித் துரைத்தான்
அராவிடத் தன்மைத்தா மெனுமலமற் றுயிருணர்ந்
தருணெறிப்படரப்
பராவிடப் புவியோர் பல்குசீர் பகரப்பருணிதன்
சச்சிதாநந்தன்
சராவிடர்மூப்பு மின்றியெஞ்ஞான்றுந் தழைகென
வாழிசாற்றுதுமே.

---

ஷை பிள்ளையவர்கள்

மாணாக்கரும் இயற்றமிழ்ப் போதகாசிரியருமாகிய

தி, சண்முகபிள்ளைபாடிய

(அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.)

பகுதியேனவைகடந்ததென்றருமறைபகருமப்பெருவாழ்
வை, விகுதியீற்றவாக் களைந்துணர்த் திடுசிற்குமுபநிடம்விய

ன்ஞாலந், தகுதியானுணர்கிற்குமாறியைந் தொருவிரி வுரைத கச்செய்தான், புகுதியேபடிவென்றிவணிலகு சச்சிதானந்தப் புலவோனே.

---

இந்நூலுரையாசிரியர் மாணாக்கரிலொருவர்

அ. முனுசுவாமிநாயகர் இயற்றிய

வெண்பா.

உபநிடதமென்னு முயர்பெரிய நூற்கிங்
குபநிடத மேயுருவாயோங்கி—யுபமகற்றி
நின்றசச்சிதானந்த நின்மலனெங்கோனெவர்க்கும்
நன்றுமுரை தீட்டினான் றேய்ந்து.

---

இந்நூலுரையாசிரியர் மாணாக்கரிலொருவர்

பவழை. தங்கவேலையர் இயற்றிய

(எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

கலையேறிக் கருத்தேறிக் கலக மில்லாக்
காட்சியதா யொளிர்தருமெய்ச் சுவானு பூதி
நிலையேறி யருள்வடிவந் தாங்கிப் போந்து
நின்றசச்சி தாநந்த னெங்கோன் வேதத்
தலையேறித் தயங்குமுப நிடத நூற்குத்
தகவுரைநன் கெடுத்துவிரித் துரைத்திட்டானால்
அலையேறிச் சுழறரும்பின் வருந்தா நின்ற
வகிலமெலா முய்ந்திடுவா னமைதி பெற்றே.

---

இந்நூலுரையாசிரியர் மாணாக்கரிலொருவர்

செ. ஆறுமுகமுதலியார் இயற்றிய

(அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.)

இன்பநிலை யிஃதெனநின் றெடுத்தியம்பு
முபநிடத நூற்கிந் நாளவ்
வின்பநிலை தன்னிலையாக் கண்டருள்கொண்
டின்னுரையொன் றியற்றி னானல்
வன்புநிலை மாறுதே வாழ்வேனைத்
தாழ்வேனை மதித்தாட் கொண்ட
வன்புநிலை யுளத்தகலாச் சச்சிதா
நந்தகுரு வள்ள லம்மா.

---

இந்நூலுரையாசிரியர் அடியார்களிலொருவர்

சேலம், திரு. கோமளேஸ்வரமுதலியார் இயற்றிய

(நேரிசை ஆசிரியப்பா.)

சீர்மலி செகமதிற் சேர்தரு முயிர்கள்
கார்மலி மயக்கக் காடழிந் துய்யப்
பெருகு மன்பாற் பிறங்குங் கருணை
கரமுனி யருளிற் கழறினன் றமிழி
லுபநிடதமென்னு முயர்பொரு ளாலதற்
கிபமெனுஞ் சமய வீட்டங் களிரிய
மடங்க லெனப்பொலி மாண்பமைந் தொளிர்வோன்
றடங்கட லெனத்திகழ் தமிழ்க்கலை கண்டோன்
பிறைசைப் பெம்மான் பிறங்கரு ளுசலன்
நறைமலர்க் கழலிணை நண்ணியுயர்ந்தோன்
மாசு றொம்முன் மயக்கறுத் தருள

வீரூர்ப் பதியி னெழுந்தரு ளெங்குரு
சச்சிதாநந்த தயாநிதி
உச்சித விருத்தி யுரைத்தருளினனே.

---

சாரதாவைத்தியநிலயம்பண்டிதர்

தஞ்சை

சண்முகம்பிள்ளையவர்கள்பாடிய

(அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.)

இபநிடத முதன்மலையிற் றவமியற்று
தில்லறத்தி னியற்றிவாழுஞ்
சுபநிடதம் பிகைபாக னருளுறு
சச்சிதாநந்தத் தூயோன் றன்பந்
தபநிடத நளபாகத் துறுசுவையிற்
றமிழ்ச் சுவைதாஞ் சாரவன்பா
லுபநிடதந் தனக்கிணையி லுரையளித்தான்
களையளித்தா னுவப்ப மாதோ.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# உபநிடதம்.

மூலமும் உரையும்.

## பாயிரம்.

### விநாயகவணக்கம்.

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

மெய்யுடைய வடியார்மேல் விருப்புடையான்
கருப்பூர விளக்குப் போலென்
பொய்யுடைய வருள்போதப் பொருளுடையா
னருளுடையான் பொறியைந் தாலு
மையுடைய மனத்தாலு மயக்குடையார்
மதங்களைத்தா மதங்க ளாக்குங்
கையுடைய முகமுடையா னகமுடையான்
றனைக்கருத்தி லிருத்தல் செய்வாம்.

(இதன்பொருள்.) மெய்யுடையவடியார்மேல் விருப்புடையான் கருப்பூர விளக்குப்போலென், பொய்யுடையவருள்போதப்பொருளுடையா னருளுடையான். எ-து. மெய்யெனப்படுவதுயாதோ அதனையேயியல்பாகவுடைய அடியார்கள்மேல் மாறாதவிருப்பமுடையவன்; கர்ப்பூரதீபம்போல எனதுபொய்

யாகிய பிராந்தியனைத்து மொருங்கோசிக்க அநுக்கிரகிக்கத் தக்க மெய்ஞ்ஞானப்பொருளுடையவன்; யாவர்பாலுங் கருணையுடையவன்—பொறியைந்தாலுமையுடைய மனத்தாலு மயக்குடையார் மதங்களைத்தா மதங்களாக்குங், கையுடைய முகமுடையா னகமுடையான் றனைக்கருத்தி லிருத்தல்செய் வாம். எ-து. அந்தர்முகநோக்கிழந்த ஐம்பொறிகளாலும் மனத்தினாலும் அல்லவற்றை ஆமெனக்கொள்ளும் மயக்க முடையோராகிய மதத்தரெனப்படுபவர்கள் யாவர்களோ அவர்களது கொள்கைகளனைத்தையும் அஞ்சாது நாசப்படுத் துந்துதிக்கை முகமுடையவன்; அவரவரதுள்ளங்களைத் தன் பாலுடையவன் யாவனோ அவனைவிடாதெமதகத்தில் வைக் குதும். எ - று. ஏனையவிளக்கென்றது; மருளைக்களைக் கத்தக்கது ஞானதீபமாதலினென்க. புறக்கரணம் அகக்கர ணம்போல்வதின் மையுடைய வெனலைப்பொறிக்குங்கொண் டாம். மதத்தரதுகொள்கைகளை அதங்களாக்கல்; பூர்வபட்ச மாதற்கியைந்த சித்தாந்தங்களெனக்காட்டலை. கையுடைய முகமுடையானென்றது; இந்நூலாசிரியர் சைவராதலினு னும் வழிபடுகடவுளாகிய உபாசனமூர்த்தமாதலினானு மெ ன்க. அவரவருபாசன மூர்த்தத்தாலன்றி அவரவர் கற்ப னைகளறுவாதலின் கருத்திலிருத்தல் செய்வாமென்றார். வா ளாமதங்களென்றது மயக்குடையாரென அடைமொழிகொ டுத்தது; ஞானகதப் பிரத்தியட்சமின்மைபற்றி. விருப்புடை யான் போதப்பொருளுடையான் அருளுடையான் கையு டைய முகமுடையான் அகமுடையானெனல்; ஒருபொரு ளைக் குறித்தென்க. நூல் உரைக்குமிடத்து நூற்பெயரும், காரணமும், ஆக்கியோன்பெயரும், அளவும், பயனும்பட உரைக்கற்பாற்று. அற்றேல், இந்நூலென்னபெயர்த்தோவெ

னின்; ஆரியத்திலிட்டவாறு உபநிடதமென்னும் பெயர்த்து. யாதுகாரணத்தாற் போந்ததெனின்; தானெனல் அயலாகா திருத்தற்கு. இதனை ஆக்கியோன் யாவனெனின்; ஆரியமென்னும் பாரிரும்பவ்வத்தை உண்டு தமிழ்ப்படுத்திய போதக்கண்ணகலாக் கருணாகரனென்னும் ஆசிரியனால் செய்யப்பட்டது. இந்நூலெவ்வளவைத்தோவெனின், ஆரியத்தில் தொகுக்கப்பட்டவாறு முப்பத்திரண்டளவினது. இதனாற் பயன் யாதோவெனின்; துக்கநிவிர்த்தி, தடையற்ற ஆனந்தம், இம்மையிற்றானே தப்பாதுறுதலேபயனெனப்பட்டது. இத்நூலைச்செய்யுள் எந்நுதலிற்றோவெனின்; தற் சிறப்புப்பாயிரமுணர்த்துதனுதலிற்று, என்னை "தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளு மெய்த உரைப்பது தற் சிறப்பாகும்" என்றார் அறிஞர். கருப்பூரவிளக்குப்போலென் பொய்யுடையவருள் போதப் பொருளுடையானென்பதுபாசனமூர்த்த மாதலின் இந்நயமெமக்கு முறுமென்பதுகருதி வணங்கியதென்க. (௧)

## குருவணக்கம்.

—:o:—

(இதுவுமது.)

நானிவன்றா னவனென்றே நவின்றறியா
தேயுமூன்ற நாயி னேற்குத்
தானமரு நிலையிதுவே தாந்தவுப
சாந்தமிது தானே தானா
மோனமொழி யிதுவெனநான் மறையினுப
நிடதமொழி முடிவு காட்டு
ஞானகுரு தேசிகனை நாவகத்தும்
பாவகத்து நவிற்று வாமே.

(இ-ள்.) நானிவன்ரு னவனென்றே நவின்றறியா தேயுழன்ற நாயினேற்கு. எ-து. நான்தான்—இவன்தான்—அவன்தான்—என்று விடாதுசொல்லிக்கொண்டு மொழிதோறும் விடாதுநின்றுள்ள தானென்னுஞ் சொற்பொருளைச் சற்றுங் கவனியாமலே பிறவிதோறு முழன்று திரியும் நாய்போல் பவனுகிய அடியேனுக்கு—தானமரு நிலையிதுவே தாந்தவுபசாந்தமிது தானே தானு மோனமொழி யிதுவென. எ-து. தானென்னுஞ்சொற்பொருள் அமைந்த நிலையிதுவெனவும் வேதாந்தத்திற் கூறிய உபசாந்தநிலை இஃதெனவுந் தானயலாகாது தானே தானுகவிளங்கும் மோனமொழி இஃதெனவும் விளங்குமாறு—நான்மறையி னுபநிடதமொழி முடிவுகாட்டு ஞானகுருதேசிகனை நாவகத்தும்பாவகத்துநவிற்றுவாம். எ-து. நான்கு வேதங்களிலுமுள்ள உபநிடதமொழிகளால் தீர்ந்தநிலைகாட்டிய ஞானுசாரியனை நாக்களாலும் பாக்களாலும் விடாது துதிக்குதும். எ-று. ஏ, அசை. நான்தான் நீதான்—அவன்தான்—இவன்தான்—அவள்தான்—இவள் தான் அதுதான்—இதுதான் என்னுமிடத்துத் தானென்னுஞ்சொல் மொழிகடோறும் அகலாதகன்றுநிற்குமாறுபோன்று தானெனற்குப் பொருளாகிய அறிவானந்தம் பொருள்கடோறும் அகலாதகன்று நிற்குமாதலின், தானமருநிலையென்ருர். எவ்வெவர்பாலுந் தானெனல் யாதுகற்றும் அயலாதலினின்றகறல் மிக்க அருமைத்தாதலின் முடிவுகாட்டு ஞானகுருதேசிகனென்ருர். வாக்கினுலும் நினைவினுலும் அன்றென்பார்,தானே தானுமோன மொழியென்ருர். நாவகத்தும் பாவகத்தும் நவிற்றல்; நிரதிசயானந்த மேலீட்டாலென்க, முடிவுகாட்டல்; எல்லாமா யல்லவுமாயிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டலை. இஃதேனைய ஆசிரியராற்கூடாமையின் ஞானகுருதே

சிகளையென்றூர். தானெனல்; ஞானஞ்ஞானரகிதநிலையை யென்க, ஈரிடத்துஞ் சாட்சியாகிற்றலின். (உ)

## அவையடக்கம்.

(இதுவுமது.)

ஓதுசுரு திகளுன்கி னுபநிடத
  மெண்ணுன்கி னுரைக டோய்ந்து
போதுமொரு வேதாந்த சொரூபானந்
  தப்பெயரைப் புனைந்த நூலி
னீதிபெரி யோருரைப்ப வதனையன்பொன்
  றில்லாத நெஞ்சி னல்யா
னுதரவு கொடுபிதற்றி யெனதறியா
  மையையும் வெளி யாக்கினேனே.

(இ-ள்.) ஓதுசுரு திகளுன்கி னுபநிடதமெண்ணுன்கி னுரைகடோய்ந்து. எ-து. சான்ருேரால் அத்தியயனஞ் செய்தற்கியைந்த நான்குவேதங்களிலும் முப்பத்திரண்டு உபநிட்த்துகளிலுமுள்ள சொற்பொருளோடகலாதுநின்று—போதுமொருவேதாந்த சொரூபானந்தப் பெயரைப்புனைந்த நூலினீதிபெரியோருரைப்ப வதனையன்பொன் றில்லாதநெஞ்சினல். எ-து. மாறின்றிவருகின்ற ஒப்பற்ற வேதாந்த சொரூபானந்த மென்னும் பெயரைத் தரித்த ஞானநூலின் வாச்சியார்த்த லட்சியார்த்த நெறியை மகத்துக்கள்சொல்ல அந்நிலையை அந்நெறித்தாகச் செல்லும் அன்பு சற்றுமில்லாதமனதினல்—யானுதரவுகொடு பிதற்றி யெனதறியாமையையும் வெளியாக்கினேன். எ-து. மிக்கதிறமையுடையோன்போல் யானுசை

கொண்டு பாடலாகப்பிதற்றி அதனுடைனதறியாமையை யும்பிறரறியச் செய்தனன். எ-று. ஏ-அசை. "பொழிப் பெனப்படுவது பொருந்திய பொருளைப் பிண்டமாகக்கொ ண்டுரைப்பதுவே" என்பதனுல் பொழிப்புரையாக்கினும், இஃதுரையாசிரியர் தொல்லை மரபாதலின். வேதம் நான் காவன; இருக்கு-தைத்திரியம்-சாமம்-அதர்வணமென்பன. உபநிடத மெண்ணூன்காவன; சிருத்திரம் பிரகதாரண்ணிய ம் முதலியன. சொரூபானந்தமாவது; ஞப்திப்பிரியந்தை. எனவே, அறிவானந்தமாயிற்று. ஆகவே, அறிவன்றி ஆனந்த மும் ஆனந்தமன்றி அறிவுமின்றாம். உண்டெனின், உபாதி ரகிதத்தா லெங்ஙன மியையும். சகிதத்தாலெனின் அறிவான ந்தம்போல் உபாதித்திரயங்கள் சச்சிதானந்த மாதற்கியை யா வென்க. ஆதலினேகமெனக்கண்டாம். காணவே, ஏகமே வாத்வைதம் பிரம்மோகமென்பதே துணிவெனப் பெற்றாம். பிதற்றலாவது; எழுத்தசைமுதலிய எண்ணிலக்கணங்கட்கு முரணுதலும், எனதறியாமையாவது; ஆதிமத்தியாந்த ரகித த்திற்குச் சகிதமாகக் கூறுமிலக்கணம் முரணுதலுமென்க. வெளியாக்கல்; பாடுதற்கும் இந்தவிஷயத்தை ஆளுதற்கும் பாத்திரனல்ல னென்பதைக் குறிப்பிக்கின்றது. எனவே, பாத்திரர்; நீதிபெரியோரென்றாயிற்று. ஆதரவுகொடுவென் றதனுல், அகங்காரத்தா லன்றெனக் குறிக்கின்றது. அறியா மையையு மென்பதிலும்மை இறந்தது தழீஇய இழிவுசிறப்பு. இந்நூ லவனதருளா லமைந்ததெனக் குறிப்பிக்கின்ற தரு த்தாபத்தி. (ரு)

## பாயிரமுற்றிற்று.

---

# நூல்.

## (ஞா ன சா த ன நி லை.)

1

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்கா
புத்திவிசா ரித்தறியும் பொலிவதனு லரவாந் [ம்
தன்போல விலையெனலா லகங்கார மதமாத்
தனைநிகராஞ் சித்தமொரு தன்மையினு னுயா
மின்போலுஞ் சலனமன மசையாம னிறுத்தி
விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட்பால் விடு
வன்போடு வருமகங்கா ரத்தினையுங் கடிந்தால் [த்து
வைத்தவிடத் திருந்துசித்த மகத்துவமுந் தருமே.

(இ-ள்.) பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காம் புத்திவிசாரித்தறியும் பொலிவதனு லரவாம். எ-து. மாற்றுயர்ந்தபொன்போல மலரகிதமாக விளங்கும் மனமெனப்படுதல்யாதோ அது பகிர்முகத்தாயவழி யியல்பாக வெய்துஞ் சஞ்சலத்தினுல் குரங்கு போல்வதாகும், அதன் திரிபாகிய புத்தியெனப்படுவெது காரியங்களை விசாரித்தறியும் மிகுதியினுல் கட்செவிபோல்வதாகும், தன்போல விலையெனலா லகங்கார மதமாத்தனை நிகராஞ் சித்தமொருதன்மையினுனுயாம். எ-து. அப்புத்தியின் திரிபாகிய அகங்காரமெனப்படுதல் தன்னைப்போல ஒருவருஞ் சமானமில்லை யெனக்கோடலால் மதயானைபோல்வதாகும், அவ்வகங்காரத்தின் திரியாகிய சித்தமெனப்படுதல் இழிவில் தனக்குத்தானே நிகரெனப்படும்

ஓரேதுவினால் நாய்போல்வதாகும்—மின்போலுஞ் சலனமன மசையாம னிறுத்தி விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட் டால் விடுத்து. எ-து. மின்போலத்தோன்றி மறைதலையுங்க ணமேனுமில்லாது சலித்தலையு மியல்பாகவுடைய அந்தமன தை அந்தர்முகத்தாயவழிச் சற்றுஞ்சலியாமனிறுத்திப் பொ ய்ப்பொருளையே நிஜமெனவிசாரித் துழலும் புத்தியெனப்படு வதை மெய்ப்பொருளாகிய சைதன்யத்தின்கண் விசாரிக்க விடுத்து—வன்போடுவருமகங்கார்த்தினையுங்கடிந்தால் வைத் தவிடத்திருந்து சித்த மகத்துவமுந்தரும் எ-து. விடயவலி மைகொண்டு பிறந்திறந்து வருதற்குரிய அகங்காரத்தையும் நாசப்படுத்தினால் சித்தமெனப்படுவது விசாரித்திலக்காகவை த்த அந்தச்சைதன்யத்தினிடத்தில் பிறழாதிருந்து நவநவமா ய மேலாய நிலைகளையு மேகமாக நிற்குமகத்துவத்தையுந் தந் தேவிடும். எ-று. ஏ—ஈற்றசை. பொன்போல விலங்குமன மென்பது முதல் நாயாமென்பது காறும், விஸ்மரணையெ னவும், மின்போலுஞ் சலனமனமென்பது முதல் சித்தமகத் துவமுந்தருமென்பதுகாறுந், தஸ்மரணையெனவுங்கொள நின் றது ஓர்ஸ்மரணையே யெனக்குறிக்க அத்தியாரோப அபவாத யுத்தியை யிக்கவி காட்டிற்றென்க. சஞ்சலமுதலிய புடைட் பெயர்ச்சிகளை உன்னுமிடத்துத்தொழில் சாதாரண தர்மமா கக் காண்டலி னிந்நான்குவமையும் பொருந்தும். இந்நான்கு புடைபெயர்ச்சியும் ஒவ்வோர்முதலினதாகக் காண்டலேயன் றி விசாரிப்புழி யின்முதலின் மனமுதலியநான்கு மவ்வவ்வவ சர நிலையாமென்க. கண்ணேசெவியாகச் சகலமந்திரங்களை யு மறிதலால் பாம்பையும், கஞ்சிவார்க்கிறவன் பின்னே திரி தலால் நாயையும், உவமையாகக் கூறியவாறுகாண்க. நிறுத்தி விடுத்து கடிந்தால் தருமெனக்கூட்டி முடிக்க. மகத்துவமு

மென்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇய வெச்சவும்மை யாதலால் நவநவமாய மேலாய நிலைகளென்றும். க்ஞானம் மனம்—புத்தி—சித்தம்—அகங்கார மென்பவற்றுள்—க்ஞானமய லாயவழி—சஞ்சலமுதலிய நான்குபுடை பெயர்ச்சியையுமே ற்று அவ்வ வற்றிற்கு வினைமுதலாக மனமுதலிய நான்கையு ங்கொண்டவாறெங்ஙனமோ அதுபோலப் பொன்போல வில ங்குதலாகிய புடைபெயர்ச்சியை யேற்று வினைமுதலாக நிற் பது ஒன்றுளதாகக் கோடல்வேண்டு மாதலின் க்ஞானமெ ன்றும். அன்றேல், இலங்குதல் யாதின்புடை பெயர்ச்சி. பொன்போல வெனல் யாதிற்குபமானம். ஆதலின் மறுக்கு தும். அயல்மயமாகாதுழி-க்ஞானமெனக்கோடற்கு முரணெ ன்னை. பொன்போலிலங்கல் மனமெனற்குவிசேடமாநிற்பதெ னின், அவ்வவசரஞ் சுத்தமனமெனலாயிற்று. ஆகவே; க்ஞா னமென்றும். மருளாயவழி மருண்மயமாதலுந் தெருளாயவ ழிதெருண் மயமாதலும் க்ஞானமாதலினைக்கும். தன்மருளை யன்றி அநிர்தசட துக்கமுந், தன்தெருளையன்றிச் சத்துசித் தானந்தமுமின்றாதலின் க்ஞானமெனற் கையமின்றெனக. ஊர்த்தமுகமாயவழி மனமுதலிய நான்குபேருமத்தியாசமெ னற்கியைதலின் அத்தியாரோபமெனவு மிவையனைத்தும் விசாரித்துத்தெளிந்துழி தானேகக்காண்டலின் அபவாதமென வும் போந்தவாறுகாண்க. மெய்ப்பொருளென்றதனால் பொய் ப்பொருளெனவருவித்தாம். பொய்ப்பொருளிலக்கு கொதுகில க்கையும்,மெய்ப்பொருளிலக்கு மலையிலக்கையும் போல்வதின் புத்திதனைமெய்ப்பொருட்பால் விடுத்தெனப்பட்டது. அகங் காரத்தினைக் கடிதலாவது; ஞானகதப்பிரத்தியட்சத்தில்ச தோதயமாக விளங்குஞ் சைதன்யத்தை யிடைவிடாதுகண் டிதுநானிதுநானெனப்பழகுங்கால் முன்போல உடல்நானெ

னவந்துழி அதனைக்கழிந்துகோடலே. அறிவேவடிவாயிருக்க வேண்டுதலைப்பற்றி. மலையிலக்குபோல்வதின் வைத்தவிடத்திருந்து சித்தம் மகத்துவமுந் தருமெனற்கு முரணென்னை. இன்றுதலாலெவர்க்குமுடன்பாடாமென நோக்கி யிங்ஙனங் கூறினரென்க. வாளாபுத்தியென்றது விசாரிக்கும் புத்தியென்றதனால் நம்பிக்கையாலிதுமெய்ப்பொருளெனக்கோடற்க. கொள்ளின் பூர்வபட்சத்திற்கியையும். இயையின் முன்போல அநிர்தசடதுக்கத்தைச் சச்சிதானந்தமாகக் கொண்டலையவேண்டிவருமென்க. விசாரித்தற்கியைந்த கருவி; சிரவணமுதலியவை.

இந்நூலில் ஒவ்வோருபநிடதகவியும்; அணுவைத்துளைத்தேழ்கடலைப்புகட்டிக் குறுகத்தறித்ததுபோலுமாதலின், இந்நூலையுணரப்புகுவார் கல்விகேள்விகளில் எத்துணையராயிருக்கவேண்டும். ஆதலின் இறுமாக்காதடங்கவேண்டும். (௧)

---

## இதனை இஃதறியுமெனல்.

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

2

சத்தமுதலைந்தனையும் பொறிகளறி
யும்பொறிக டம்மைத் தானு
யொத்தகர ணமதறியுங் கரணத்தை
யறியுமுயி ருயிரைத் தானு
நித்தியமா யிருந்தறியுஞ் சாட்சியகண்
டாகார நீங்கி மேலா
யித்தனையும் பகுத்தறியு மறிவுவடி
வாயிருப்ப தியல்ப தாமே.

(இ-ள்.) சத்தமுதலேந்தனையும் பொறிகளறியும் பொறி கடம்மைத்தாறு யொத்தகரணமதறியும். எ-து. சத்தபரிச முதலிய ஐந்துவிடயங்களையும் நேராநின்றதற்குரிய பொறிக ளறியும். அங்ஙனமறியுமப்பொறிகளை அவைதானாக ஒத்துநி ன்ற அந்தக்கரணமாகிய மனமறியும்—கரணத்தையறியுமுயி ருயிரைத்தானு நித்தியமாயிருந்தறியுஞ்சாட்சி. எ-து. அந்த மனதை உயிரறியும். அந்தஉயிரையுஞ் சீவசாட்சி சதோதய மாகநின்றறியும்—அகண்டாகார நீங்கிமேலாயித்தனையும் பகு த்தறியு மறிவு வடிவாயிருப்ப தியல்பதாம். எ-து. அந்தச்சீவ சாட்சியை அகண்டாகாரமா நின்றுள்ள வீசுரசாட்சியாகிய பிரமமறியும். அந்த வீசுரசாட்சியாகிய பிரமநிலையுங்கழன்று அதற்கு மேல்மேலாகநின் றித்தனைநிலைகளையு மொவ்வொ ன்றாகப் பகுத்தறியநின்ற தெந்தஅறிவோ அந்த அறிவேவ டிவாயிருப்பது நமது சுபாவநிலையாம். எ-று. ஏ—அசை. இந் திரியம், கரணம், சீவன், கூடஸ்தன், ஈசன், பிரமம், அறிவு, வென்பவற்றுள் அறிவொழியயேனையவற்றுளொவ்வொன்றும் ஒன்றுக்குத்திருக்காயும் மற்றொன்றுக்குத் திரிசியமாயு மிரு த்தற்கியையுமாறு போன்று அறிவியையா திருத்தலின் இத்த னையும் பகுத்தறியு மறிவுவடிவாயிருப்ப தியல்பதா மென்றார். எனவே: அறிவையன்றி யித்தனைபகுப்புமின்றென்பதாயிற்று. ஆகவே, இத்தனைபகுப்புகளுள் ஒவ்வொன்றையு மவரவர்க் கெட்டியவளவாகச்சென்று தீர்ந்தநிலையென விறுமாந்திருந்த லைத் தவிர்ந்திருத்தற் கெனக்கண்டாம். அறிவின் பிரதிபலன மேயன்றி அறிவுதிருக்கு திரிசியமெனற் கியையாது பற்றி இங்ஙனங் கூறினாரென்க. சத்தமுதலிய வைந்துவிடயங்களு ள் ஒவ்வொன்றுக்கும் அதற்குரிய இந்திரியங்களிருக்குமாறு போன்று அப்பொறிகளை அறிதற்கு மனம் ஐந்தலைநாகம்போ

லவைதானுயிருத் தலினானுந் தன்னையன்றி அப்புலன்களிருந் துந் தத்தம் விடயங்களை அறிதற்கேலாததானும் "பொறிகட ம்மைத்தானுமொத்த கரணமதெனை ஒருமையிற் கூறினார். இங்ஙன மெவ்வெவ்வுயிர்பாலு மனுபவம் நிகழ்தலாலென்க. பொறிகடம்மை யெனப்பன்மையிற்கூறாது கரணத்தையென ஒருமையிற்கூறியது தக்க உதாரணமெனக் கண்டாம். உபா திபற்றி, ஏகதேசாகாரம் உயிரெனவும் அகண்டாகார மீச னெனவுஞ்; சாட்சியெனல் பற்றி, கூடஸ்தனெனவும் உரை கொண்டாம். அகண்டாகார மென்றதனா லேகதேசாகார மெனற்கு முரணென்னை. சாட்சியெனலா லிருவகைசாட்சி யெனக் கோடற்கு மாறென்னை. இந்நிலைகளனைத்தும் பூர்வ பட்சமாதற்கு யோக்கியதையா நிற்றலின், நீங்கியென்றார். எவரெவரெந்தெந்தமேலாயநிலைகள் சொல்லினுமிவற்றுளடங் குமாதலினானு மங்ஙன மந்தந்தநிலையாய் அந்தந்த வவசரத்தி லிருப்பது தானாதலினானும் நீக்கியெனப் பிறவினையாக்கூறாது நீங்கியென்றார். இதனாலகண்டாகார மைந்தாம்வேற்றுமை நீங்கற்பொருட்டா நின்றதெனப் பெற்றாம். நித்தியமாயிருந்து நிதல் சாட்சிக்கியல்பாதலி னிருவகை சாட்சியென்றாம். (உ)

---

(தம்மாலறியப்படுபவை தாமாகாவெனல்.)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விடையமறிந் திடும்பொறிகள் விடைய மாமோ
மிக்கபொறி யறிகரணம் பொறிக ளாமோ
வடையவறி சீவனந்தக் கரண மாமோ
வதனையறிந் திடுஞ்சாக்ஷி சீவ னாமோ

தடையறவொன் றனையறியு மொன்று மேலாஞ்
சாட்சியையொன் ருலறியத் தகுமோ தானு
யிடையறவொன் றிலகுமெனி லதனைக் காண்டற்
கே துண்டா மதுவாகி யிருந்து காணே.

(இ-ள்.) விடையமறிந்திடும் பொறிகள் விடையமாமோமி க்கபொறியறிகரணம் பொறிகளாமோ. எ-து. விடையங்களை அறிதற்கியைந்த இந்திரியங்கள் விடயமாதற்கியையுமா அங் ஙன மேலாநின்ற புலன்களை அறிதற்கியைந்த மனம் இந்திரிய ங்களாகுமா—அடையவறிசீவனந்தக்கரணமாமோ வதனையறிந் திடுஞ்சாட்சி சீவனுமோ. எ-து. ஒருங்கறிதற்கியைந்த சீவனென் பது மனமாதற்கியையுமா அந்தச்சீவனை யறிதற்கியைந்த சீவ சாட்சியாகிய கூடஸ்தன் சீவனாதற்கியையுமா—தடையறவொ ன்றனையறியுமொன்றுமேலாஞ் சாட்சியை யொன்ருலறியத் தகுமோ. எ-து. தடையின்றி ஒவ்வொன்றினையு மறிதற்கியைந் த ஒவ்வொன்றும் மேலாகச்செல்லுமாயின் எவற்றிற்குமேலா நின்ற சாட்சியை வேறென்ருலறிதற்குத்தக்கதாமோ—தானு யிடையறவொன்றிலகுமெனி லதனைக்காண்டற்கேதுண்டா மதுவாகியிருந்துகாண். எ-து. தானேதானு யிடைவிடாமல் ஒப்பற்றசைதன்யஞ் சதோதயமாகவிளங்கிக் கொண்டிருக்கு மெனச் சுருதியுத்தி அனுபவமேற்குமெனி லதனைத் தெரிசித் தற்கேது ஓர்முதலாக வுள்ளது. இன்ருதலி னதுவேதானுகியி ருந்து காணுதி. எ-று. ஏ-அசை. இஃதறிவுக் கறிவென்னு மாகமத்தை மறுத்தது, அநவத்தாதோடமுறுதற்கியைதலின். அறிதற்றன்மையனவாகிய புலன்கள் அறியப்படுந் தன்மைய னவாகிய சத்தமுதலிய விடயஙகளாகுமாயின் கரணங்கள் புலன்களாகவும் ஜீவன் அந்தக்கரணமாகவுங் கூடஸ்தன் ஜீவ

ஞகவுமாகலாம். ஆதலின் சுவானுபவமில்லாதார் ஜீவசாட்சியாகிய கூடஸ்தநிலையொன்றுளதாக வுற்றுவிசாரித்தறியாது அதனை ஜீவனெனக் கோடல்தவிர்தற்கும்; இவ்வாறாகமேல்மேலொன்றை யொன்றறியுமாறுபோன்று ஜீவசாட்சியாகிய கூடஸ்தனையுமறிதற்கு வேறொன்றிருக்கவேண்டுமே யென்று சங்கைவரா ததற்கியைந்த நிலைகூறியதை மறுக்காதேற்றற்கு மின்னனங் கூறினாரென்க. சாட்சியென்றதனை லதனினும் மேலாய நிலையின்றென்பதாயிற்று. ஒன்றை யொன்றறிவதாக மேல்மேல் சேறல் யுத்திபூர்வகமு, மங்ஙனஞ் செல்லவொட்டாது தானே அமையச்செய்வது ஞானகதப்பிரத்தியட்சானுபவமுமாம். அறியத்தகுமெனக்கோடல் யுத்திபூர்வகமெனவும், அறியத்தகுமோவெனமறுத்தல் அனுபவபூர்வகமெனவுங் கோடற்கியையுமாறுகாண்க. ஆகாயத்துக்குமேல் வேறாகாயமில்லாவாறுபோன்றிருத்தலின், சாட்சியானது தானேயிடையற நின்றிலகுமெனி லதனைக்காண்டற்கேதுண்டா மதுவாகி யிருந்துகாணேயெனப்பட்டது. அந்தப்பிரத்தியட்சானுபூதியிழப்பே இவ்வாறாயபேதமெனக் காட்டற்கிக்கவி கூறப்பட்டதென்க. எனவே, அனுபூதியில்லாவிடத் திவ்வையந்திரி பறாதெனக்கண்டாம். இக்கவியிலுள்ள ஐந்தோகாரமும் எதிர்மறை. (௬)

## (விருத்திஞானத் திரியவியல்பு.)

### இதுவுமது.

மேடமன்றோ விருத்தியகண் டாகார விருத்தி விசேட
கவிருத்தி யொடிவையே விருத்திகண் மூன்றாகு
மாயமன்றோ விருத்திவிட யாஞ்ஞானம் போக்கி
யவ்விடயந் தோற்றுவிக்கு மகண்டமெனும் விருத்தி

தூயசிதஞ் ஞானத்தைப் போக்கியச் சாட்சியையே
தோற்றுவிக்கும் விவேகவிருத் தியுமகண்டாஞ் ஞானம்
போயிடச்சீ வன்சாட்சி பூரணமே தானும்
போதநிலை பொருத்துமெனப் புகன்றிடுநான் மறையே.

(இ-ள்) மேயமனோ விருத்தியகண் டாகாரவிருத்தி விவேக விருத்தியொடிவையே விருத்திகண்மூன்றாகும். எ-து. என்று மியல்பாயுள்ள மனோவிருத்தி அகண்டாகாரவிருத்தி விவேக விருத்தியெனக் கூறப்படு மிவைகளே விருத்திஞானம் மூன்றெனப்படுவனவாம்—ஆயமனோவிருத்தி விடயாஞ் ஞானம் போக்கி யவ்விடயந் தோற்றுவிக்கும். எ-து. அங்ஙனமாய மனோவிருத்திஞானமெனப் படுவது; கடாதிவிடயங்களை மறைத்திருந்த அஞ்ஞான மிஃதெனக்காட்டி, அதனைப்போக்கி, அவ்விடயங்களி னெதார்த்தநிலைமை யிஃதெனவிளக்கி விடுதற்பாலதாம்—அகண்டமெனும் விருத்தி தூயசிதஞ்ஞானத்தைப்போக்கி யச்சாட்சியையே தோற்றுவிக்கும். எ-து. அகண்டாகார விருத்திஞானமெனப்படுவது; நிர்மலமான சைதன்யத்தை மறைத்திருந்த அஞ்ஞானமாகிய அவித்தைகெடச் செய்து ஜீவனுக்குச் சாட்சியாநின்றுள்ள கூடஸ்தனைமாத்திரம் விளக்கிவிடுதற்பாலதாம்—விவேகவிருத்தியு மகண்டாஞ் ஞானம்போயிடச்சீவன் சாட்சிபூரணமே தானும் போதநிலை பொருத்துமெனப் புகன்றிடுநான்மறை. எ-து. விவேகவிருத்தி ஞானமெனப்படுவது; அகண்டாஞ் ஞானமாகிய மாயையெனவின்னதிதையெனக்காணுமற் போகச்செய்யும் செய்வதுமன்றி அதனு லம்மாயைபோகவே சிவசாட்சியாகிய கூடஸ்தனு மீசுரசாட்சியாய்ப் பரிபூரணமாகவிளங்கும் பிரமமுந்துவிதமுரு தேகமாதற்கியைந்த போதநிலையையும்வரச்செயற்

பாலதாமென நான்குவேதங்களும் முறையிடும். எ-று. ஏ-அசை. விடையாஞ் ஞானத்தைப்போக்கலாவது; தத்தமக்கெனச்சுயம்பா யோர்பொருளின்மையைக்காட்டலே. தூயசிதஞ்ஞானத்தைப் போக்கலாவது; வியட்டியுபாதி சகிதமாநின்றுணருஞ் சைதன்யமிஃதெனக் காணவொட்டாமல் மறைக்கும்மறைப்பு தனதேகதேச மருளையன்றி வேறொன்றின்றெனக்காட்டலே. அகண்டாஞ்ஞானத்தைப் போக்கலாவது; சமட்டியுபாதி சகிதமாநின்றுணருஞ் சைதன்யமிஃதெனக் காணவொட்டாமல் மறைக்கும் மறைப்பு தனதகண்டமருளையன்றி வேறின்மையெனக் காண்டலேயெனக் கொள்க. விடயாஞ்ஞானமுள்ளளவும் அவித்தையும், மாயையு, மெங்ஙனமகலும். விடயமாவது; கருத்துப்பொருள் காட்சிப்பொருளாகிய திணைபாலிடங்களே. இங்ஙனம் விசாரித்துத் தெளிந்துழி அறிவையன்றி விருத்திஞானத்திரியமு மிங்ஙனங் கோடற்கியைந்தமருளும் வரற்கிடமின்றாம். இன்றாகவே, சாட்சிந்துவிதபேத மெங்ஙனமுண்டாம். இதுபற்றிச் சீவன்சாட்சி பூரணமே தானும்போதநிலை என்றார். பூரணமேயென்ற தேற்றத்தால் சீவசாட்சியே பூரணமெனவும் பூரணமே சீவசாட்சியெனவும், ஆதற்பாலதால் தானும் போதநிலையெனப்பட்டது. தோற்றுவிக்குமென்பன விரண்டும் பிறவினையாதலால் பொருத்துமெனக்கூறினார். இஃதென தனுபவமாத்திரமன்று, சுருதிக்கு முடன்பாடெனக் காட்டப் புகன்றிடுநான்மறையெனப்பட்டது. தூயசிதஅஞ்ஞானம், அவித்தையெனவும், அகண்டாஞ்ஞானம், மாயையெனவுங் கோடலை மறுப்பாருமுளர். அஃதனுபவத்தில் முரணுதற்கென் செய்வர். அது பொருந்தாதென்க. (௬)

(ஞானி அஞ்ஞானி விருத்திபேதநிலைமை.)

(அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.)

5 மிக்கபரா தீனர்களே யுலகமெலா
மதில்விருப்பு வெறுப்பற் றோர்க
டொக்கமன்றோ விருத்தியணு மாத்திரமா
வறிவகண்ட சொரூப மாகு
மக்கதிக டோராதா ரறிவணுவா
மனோவிருத்தி யகண்ட மாகத்
தக்கபிரா ரத்தவசத் தவராகிப்
பிறந்திறந்து தளர்கின் றாரே.

(இ-ள்) மிக்கபராதீனர்களே யுலகமெலாம். எ-து. மேலாய பரத்துக்கு விலக்காநிற்பவர்களே உலகெங்கு முள்ளவராவர்- அதில் விருப்பு வெறுப்பற்றோர்க டொக்கமன்றோ விருத்தியணு மாத்திரமா வறிவகண்ட சொரூபமாகும். எ-து. ஆயினு மவ்வுலகத்தின்கண் ணியல்பாநின்றுள்ள விருப்பு வெறுப்பகன்றோர்களது முன்னர் சுருங்கக்கூறிய மனோவிருத்தியென்பது சுவானுபவநிலையில் அணுமாத்திரமாகவும், விவேகவிருத்தி அகண்டசொரூபமாகவும் விளங்காநிற்கும்-அக்கதிகடோராதாரறிவணுவாமனோவிருத்தி யகண்டமாகத் தக்கபிராரத்தவசத்தவராகிப் பிறந்திறந்து தளர்கின்றார். எ-து. அங்ஙனமாய அநுபூதிநிலைகளைத் தீரவிசாரித்துத் தெளியாதவர்களது விவேகவிருத்தியென்பது அணுமாத்திரமாகவும் மனோவிருத்தியென்பது அகண்டாகாரமாகவும் நிலையாநிற்கும், இதுகாரணத்தாலிவர்கள் தத்தமக்கியைந்த பிராரத்வகன்ம வயப்பட்டவர்களாகி ஓயாது பிறந்திறந்து சுகதுக்கத்தில் மொத்துண் டெய்

ப்புறுகின்றனர். என்-று. ஏ-அசை. உலகமெலாமெனல் இட வாகுபெயராய் உயிர்களைப் பொதுமையிற்காட்டலின் மிக்க வெனலைப் பரத்துக்கு அடைமொழியாக்காது முழுதும் மூடர்களேயெனப் பயநிலையாக்கின் சிறப்பிற்றுமெனக்கொ ள்ளினு மமையும். ஆதலின், உலகமெலாமிக்க பராதீனர்க ளே யெனமுடிக்க. உலகம், உண்மையாயின் வெறுப்புறுதற் கேதென்னை. இருமைக்குமிடமாநிற்றலின், உலகம் மித்தை யெனற்கிடம்பெறுதோ? அதனலெய்தற்கியைந்த விருப்புவெ றுப்புறுதலும் அதனை மெய்யென நுகரவெழுந்த மனோவிருத் தி அணுமாத்திரமாதலு மறிவு அகண்டசொரூபமாதலு மெய் தற்கிடம்பெறுதோ? இங்ஙனமாய நிலைகளைச் சற்றுமறியாதா ரறிவு அணுவாகவும் மனோவிருத்தி அகண்டமாகவும், அதனல் தக்கபிராரத்த வசத்தவராகிப் பிறந்திறந்து தளர்கின்றதாகவும் கூறியதை யேற்றற்கிடம்பெறுதோ? இங்ஙனமிருக்க இதனை மறுப்பதென்னமதி. ஓரறிவே மருளாநின்றுழி மனோவிருத்தி யெனவும் அகண்டாகாரமெனவும் அவ்வறிவே தெருளாநின் றுழி விவேகவிருத்தியெனவும், அகண்டாகார மெனவும், போந்ததுகாரணமாக அவ்வவ்வவசரத்தி லிவ்விரண்டு விருத் தியும் அணுவெனற்கு முடன்படுமாதல்பற்றி இங்ஙனங் கூறினரென்க. இதனைக்காண வேண்டின் நாமே தக்க உதா ரணமாயிருக்கின்றனம். ஒவ்வொரு விருத்தியு மணுமகத்தாய வவசரத்தைக் காட்டக்கூறியதென்க. 'மருளெனல், அக விருட்குபாதானமாகவும்; தெருளெனல், அகவொளிக்குபா தானமாகவும் நிற்றலே. நிற்கவே; அங்ஙனமாய விருட்குமொ ளிக்கு முபாதேயம், அநிர்தசடதுக்கமும் சத்துசித்தானந்தமு மெனக் கண்டாம்.

(ரு)

(உபரதிவைராக்கியஞானத்தாலுறுபயன்.)

இதுவுமது.

6 தோற்றுமுப ரதிவைராக் கியஞான
மூன்றிவைக டொழிற்பட் டாரு
ளேற்றுமுப ரதியுடையார் பிரமாதி
பதமடைவ ரிகலோ கத்திற்
போற்றும்வை ராக்கியர்க்கு மப்பதமுண்டா
ஞானம் பொருந்தி னோர்க்குச்
சாற்றரிய தனிமுத்தி சரீராந்தத்
தெனவுரைப்பர் தகைமை யோரே.

(இ-ள்) தோற்றுமுபரதி வைராக்கியஞான மூன்றிவைக டொழிற்பட்டாருள். எ-து. தன்னைத்தானடைவோர்க்கு முறையே யுண்டாதற்கியைந்தவை; உபரதி, வைராக்கியம், ஞானம், எனமூன்றும். இம்மூன்றுக்கியைந்த முயற்சிக்கண் அதனதன் வயப்பட்டவர்களுக்குள்-ஏற்றுமுபரதியுடையார் பிரமாதிபதமடைவர். எ-து. எவராலு மதிக்கத்தக்க உபரதியெனப்படுவது; பொருளல்லவற்றை யானெனதாகக் கொள்ளும் மயக்கத்தில் வெறுப்புறுதலாம், அதனைமறவாது காப்பாற்றுபவர் அவ்வுபரதியை யுடையராவர். அவர்க்குப்பயன், தூலசரீராந்தத்தில் பிரமலோகாதிபதங்களாம்-இகலோகத்திற் போற்றும் வைராக்கியர்க்கு மப்பதமுண்டாம். எ-து. புகழத்தக்க வைராக்கியமெனப்படுவது ; உபரதியாலெய்திய வெறுப்புறுதலை யிடையிற்கலங்காது மரணபரியந்தம் இகலோகத்தில் காத்தலாம். அங்ஙனம் காத்தலையுடையார் அவ்வைராக்கியத்தையுடையராவர். அவர்க்குப்பயன் அந்தப்பிரமாதிபதங்

களனைத்தும் வெறுப்பாகக் காண்டலாம் - ஞானம்பொருந்தி னோர்க்குச் சாற்றரியதனிமுத்தி சரீராந்தத்தென வுரைப்பர் தகைமையோர். எ-து. ஞானமெனப்படுவது; பொருளைப் பொருளாகக்காண்டல் காரணமாகத் தன்னைத்தானுகக்கண்டு நிற்றலாம். அதனையுடையோர், அயலனைத்தையுந் துனதுபிரி திபலனமாகக்காணும் நிலைமையுடையவராவர் அவர்க்குப்ப யன்; காரணசரீராந்தத்தில் சொல்லற்கரிய கூடஸ்தபிரம அ யிக்கியமே முத்தியெனநிற்பதாம், என்று சத்துக்கள் கூறு நிற்பர். எ-று. ஏ - அசை. சரீராந்தத்தெனலை; கடைநிலைத் தீபமாக்கித் தனித்தனி உபரதியுடையார்க்குத் தூலசரீராந்தத் தெனவும்; வைராக்கியமுடையார்க்குச் சூக்குமசரீராந்தத்தெ னவும்; மெய்ஞ்ஞானமுடையார்க்கு, காரணசரீராந்தத்தென வும் பொருள்கொள்க. அன்றேல்; முரணும், சரீரமெனப் பொதுப்படக் கூறினமையின். உரையிற்கோடலென்னு முத் தியால், உபரதியுடையார்க்கு, வெறுப்புறற்கியைந்த திகலோ கம்போல வைராக்கியமுடையவர்க்கு, வெறுப்புறற்கியைந்த து அப்பதமெனப் பொருடாற்கு இகலோகத்திலென்பதில், இல்லுருபை ஐந்தாம்வேற்றுமை யுருபாக்கி, உவமைப்பொரு ளாக்கில் முரணின்மையா லேற்கப்பாற்று. இகலோகத்தி லென்பதில் இகரம், அணிமைசுட்டாகவும்; அப்பதமென்ப தில் அகரம், சேய்மைசுட்டாகவுங் கொளநிற்றலின், உபரதி யுடையார்க்கு வெறுப்பாயது இகலோகம்போல வைராக் கியமுடையவர்க்கு வெறுப்பாயது அப்பதமெனக்கொண்டா ல் முரணென்னை? சுருங்கச்சொல்லலென்னு மழகாலென்க. பிரமபதமென்னுது ஆதியென்றமிகையால், உபரதி வைராக் கிய ஞானமென்பவற்றை உபரதியில் உபரதி வைராக்கியம்

ஞானமெனவும்; வைராக்கியத்தில், உபரதி வைராக்கியம் ஞானமெனவும்; ஞானத்தில், உபரதி வைராக்கிய ஞானமெனவும் மும்மூன்முக்கவும்; அவ்வவற்றிற்குரிய முயற்சிகளும் அவ்வவற்றிற்குரியவரும் அதநற்கியைந்தபலனும் பெறுமெனமாட்டுதலால் மாட்டெறிந்தொழுகலென்னு முத்தியாக்கவும் பெற்மும். பெறவே சிற்சிலருக்குத் தனித்தனி ஒவ்வொன்றேனும் உபரதி வைராக்கியமேனும், உபரதிஞானமேனும், உபரதி வைராக்கியஞானமேனும் வாய்ப்பதினும் அவ்வவ்வவசரத்திற்கியைந்த சேட்டையும் பலனும் முரணுதெய்தற்பாலதாதலானு மிங்ஙன மனுபவமாக ஆங்காங்கு காணப்பெறுமாதலானும் மறுக்காதேற்றனம். இங்ஙனமாய விரிவனைத்தையும் வேதாந்தப்பெருங்கடலில் ஆரியத்தில்தோன்ற விரித்துரைத்திருப்பதால் அந்நூல்களிற்காண்க. இந்தமுப்பத்திரண்டுள் ஒவ்வோர்கவியுஞ் செல்லச்செல்ல ஆழமுடைத்தாதலினுழமுடைத்தாதலென்னு மோரழகுமாம். எனவே, உபரதி வைராக்கியஞானமெனக் கூறியது; அறிவின் அவசரநிலையெனக்காட்டற்காதலின் இம்மூன்றும் ஒவ்வோர்முதலன்றென்க. இவையெனச் சுட்டாக்கலால் மூன்றெனலை வினைமுற்முக்குக. இம்மூன்றிலக்கணமும் வேதாந்த விலக்கியத்தினமைதியாம். அவ்விலக்கியமின்றே லவ்விலக்கணம் யாதுபயன்பெறும். இவைபோன்றனவாகிய விலக்கணங்கட்கறி விலக்கியம். (௩)

## (திரிபுடிநிலையாமாறு.)

### இதுவுமது.

மெய்வாய்கண் ணுடுமூக்குச் செவியாலுண்
பதுவிடயம் விடயம் யாவு

மைவாயி லரவெனவுற் றுணர்தன்மனோ
விருத்தியவை யறிவ தாகிப்
பொய்வாயின் செயல்களெலாந் தனதாகின்
றிடல்சீவ போதம் வேறுத்
தைவாய்வெண் பிறைபோலத் திரிபுடிக்குஞ்
சமசாட்சி தானே தானும்.

(இ-ள்) மெய்வாய்கண் ணுமூக்குச் செவியாலுண் பது விடயம். எ-து. தொக்குமுதலிய பஞ்சேந்திரியங்களால் அனுபவிக்கப்படுவது சத்தமுதலியவிடயமாம்-விடயம்யாவு மைவாயிலரவெனவுற்றுணர் தன்மனோவிருத்தி. எ-து. அங்ஙனமாய விடயமனைத்தையும் ஐந்தலைநாகம்போ லவ்விந்திரியங்கள் காரணமாக ஊன்றியுணர்தல் மனோவிருத்தி ஞானமாம் - அவை யறிவதாகிப் பொய்வாயின் செயல்களெலாந் தனதாகின்றிடல் சீவபோதம். எ-து. சத்தியம்போல மித்தையாநின்றுள்ள அகக்கரணம் புறக்கரணங் காரணமாக வியங்குஞ் செயல்களனைத்தையுந் தனதாகப்பாவித்து நிற்றல் சிதாபாசனாகியசீவனும்-வேறுத்தைவாய் வெண்பிறைபோலத் திரிபுடிக்குஞ் சமசாட்சி தானே தானும். எ-து. இவற்றிற்கு விலக்காகித் தைமாதத்திலுதித்த வெண்பிறைபோலத் திரிபுடிக்குஞ் சமத்துவமாகச் சாட்சியாநின்று விளங்குவதுயாதோ அது கூடஸ்தனும். அதனையன்றித் தானேதானுதற் கியைந்தநிலை வேறின்றாம். எ-று. புலனும், கரணமும், சீவனும், தானேதானுதற்கியைந்தநிலை அன்றெனக்காட்டத் திரிபுடிக்குஞ் சமசாட்சி என்றார். தைவாய்வெண்பிறைபோலவென் றுவமித்தது; அங்கே மாசும், இங்கே திரிபுடியுமாய தடைசற்றுமின்மைபற்றியாதலா லிது தொழில்சாதாரண தர்மமென்க. தானேதானு

நிற்குநிலை பஞ்சேந்திரியங்களி லொன்றெனவுங் கரணங்களில் மனமெனவும் அப்பாலாயநிலை ஜீவனெனவுங் குறிகொண்டவலமாவாரைமறுத்தற் கிங்ஙனங் கூறியதென்க. இந்திரியக்குறி, கண்முகிமுதலியமுத்திரைகளும் கரணக்குறி,மூலாதாரமுதலியவையும். ஜீவக்குறி, ஒன்றுந்தோன்றாது நிற்றலுமென்க. புலனின்றியக்கண், விடயமும்; கரணமின்றியக்கண், புலனும்; சீவனின்றியக்கண், கரணமும்; கூடஸ்தனின்றியக்கண், சிதாபாசனும்; எங்ஙனமுணரப்படும். இதனால், காண்பான் காட்சி காணும்பொருளாகிய இவைமூன்றையும் சிவபோதமெனுங்காறு மேற்குமெனவும், சிவசாட்சியாகிய கூடஸ்த னேறகாதெனவுமிக்கவியிற் குறிப்பிக்கப்பெற்றாம், சிவசாட்சி தானேதானயநிலையா நிற்றலினென்க. தன்னையுமயலையு மறிதற்றகையது சாட்சிக்கன்றி வேறொன்றுக்கின்மையின் சாட்சி திரிபுடியற்றதென்றும். தன்னையன்றி அயலின்மையின் தானேதானுமென்னும் யோக்கியதைபெறப்பட்டது. இக்கவியினாலும் அறிவே முக்கியமெனவு மேனையவை அமுக்கியமெனவுங் கொண்டாம். நோக்குமுதலிய பஞ்சேந்திரியங்களாவன; தொக்கு சிங்குவை சட்சு ஆக்கிராணம் சுரோத்திரமென்பன. விடயம் ஐந்தாவன; பரிச ரச ரூப கந்த சத்தமென்பன. ஜீவிக்குந்தன்மய தாதலின், சாட்சிபோதமென்னாது சிவபோதமெனப்பட்டது. போதம் அறிவு சிவமே, நானெனல், துவிதம். தானே தானெனல், அத்துவிதம் ஏகமேவாத்துவித மெனற்கியைதலின். (எ)

## (அஞ்ஞானிகளினியல்பு நிலை.)

ஓதரிய வஞ்ஞானந் தனையறியா
வுணர்விதற்கோ ருறுதி மூல

மாதன்மனோ விருத்தியவை யகற்றியொளி
  தனையறித லகண்டா காரங்
காதலினு லருளியசற் குருவருளாற்
  பெறுமகண்டா கார மாகுஞ்
சாதகமே தானுகி யிருப்பதே
  ததுசொருப சாட்சி யாமே.

(இ-ள்) ஓதரியவஞ்ஞானந் தனையறியா வுணர்விதற்கோ ருறுதிமூல மாதன்மனோவிருத்தி. எ-து. கணித்தற்கரிய அஞ்ஞானமெனப்படுவது; தன்னைத்தானென அறிதற்றகை யற்றதுயாதோ அந்தஉணர்வேயாம், இதனைத்தெளிய வொட்டாது மருளின்கண் ஆழ்த்தற்குறுதிமூலமா நிற்பது மனோ விருத்தி யெனப்படுவதாம் - அவையகற்றி யொளிதனையறிதலகண்டாகாரம். எ-து. அங்ஙனமாய மூடநிலைகளை யொருங்ககலப்பண்ணி, பண்ணினவிடத்துச் சதோதயமாநின்றொளிர்வது சுயஞ் சைதன்யமாதலா லதனை அதுவாக நின்றறிதலகண்டாகார ஞானமெனப்படுவதாம்-காதலினுலருளியசற்குருவருளாற் பெறுமகண்டா காரமாகுஞ், சாதகமேதானுகி யிருப்பதே ததுசொருப சாட்சியாம். எ-து. இம்மூன்றனு ளன்போடருளிய சற்குருவின் அநுக்கிரகத்தாலடையத்தகுவது அகண்டாகார ஞானமெனப்படுவதேயாம். வேறன்மையின், அவ்வொளி தானுகப் பல்லூழிகாலம் பழகவேண்டியது சாதகமெனப்படுவதால் அந்தச்சாதகமே தனக்குரிய முயற்சியாகி என்று மிருப்பதுயாதோ அது தானே தானுதற்கியைந்து நிற்பது சொரூபசாட்சியெனப்படுவதாம். எ-று. ஏ-அசை. தனக்கெனச்சொரூபமொன் றின்மையின், ஓதரிய அஞ்ஞானமெனப்பட்டது. அஞ்ஞானம், மனோவிருத்தி, அகண்டாகாரமென்

பவற்றுள் முன்னையவிரண்டும் பகிர்முகத்திற்கும், பின்னைய தொன்றும் அந்தர் முகத்திற்குமியைந்தனவென்றுமியிற்று, யாதுகற்கினு மெய்த்தவமுயலினும் ஞானப்பிரகாசங்காண்டலரிது. அதனைவழுவாது காத்தலரிது. அதனையன்றி அனைத்து மின்றெனவறிதலரிது. அவ்வொளியே தானெனவறிதலரிது. அவ்வொளியைச்சத்து சித்தானந்தமாகவு மந்தச்சத்து சித்தானந்தத்தை அமிர்தசட துக்கமாகவும் பகுத்துணர்தல் மிகவுமரிது. இத்தனையு மவ்வொளியாகக்காண்டலரிது. இடையிடையே ஊழிற்கியைந்தவாறு பற்பல விகற்பநூலதேகங்கள் வந்துவந்தகலும். அகலினும், ஆங்காங்குசெய்து நின்ற நிலைபாகங்கள் சாத்தியமாதல் காறுந் தொடர்ந்தேவரும். அங்ஙனந்தொடர்ந்துவருதலை, மறவாதுகண்டுசாதித்தலைச் சாதகமென்றார். சாதகமேதானாகி யிருப்பதென்பது விடாமுயற்சியைக்குறித்தற்கென்க. இக்கவியுந் தானே தானதற்கேற்றநிலையைக்கூறியது. (அ)

௯

## (விருத்தியுஞ் சீவனும் விபுவாகுநிலைமை.)

விருத்தியுஞ்சீ வனும்விடயத் தினைப்பார்கிற் பெரிதாம் ௯
விருத்தியின்ஞா னம்விடயாஞ் ஞானத்தை கயற்றின்
விருத்தியுஞ்சீ வனும்விடயா காரம தா மதுபோல்
விருத்தியுஞ்சீ வனுஞ்சத்தா காரம தா யமைந்தால்
விருத்தியைச்சீ வனைவிடயத் தினையறியுஞ் சாட்சி
வேந்தனவை யாதிருந்து மேன்மைபெறுந் திறம்போல்
விருத்திவிட யஞ்சீவன் சாட்சியிவை தோன்று
விபுவாவன் ஞானியென விளம்புமுப நிடதம்.

(இ-ள்.) விருத்தியுஞ்சீவனும் விடயத்தினைப்பார்க்கிற் பெரிதாம். எ-து. அதோமுகத்தில் விருத்திஞானமுஞ் சிதாபாசனுந் தத்தமக்குரிய விடயங்களைப்பார்க்கிலும் விபுவாகும்-விருத்தியின்ஞானம் விடயாஞ்ஞானத்தை யகற்றின் விருத்தியுஞ்சீவனும் விடயாகாரமதாமதுபோல். எ-து. கல்விகாரணமாகவெழும் விருத்திஞானத்தைக்கொண்டு அவ்வவ்விடயங்களை மறைத்திருக்குமஞ்ஞானத்தை அகலச்செய்யின் அவ்விருத்திஞானத்தோடே சிதாபாசனும் வேறுமயமாகாது விடயாகாரமயமாவன் அதுபோல-விருத்தியுஞ் சீவனுஞ் சத்தாகாரமதாயமைந்தால். எ-து. ஊர்த்தமுகத்தில் விருத்திஞானத்தோடு சிதாபாசனும் ஐயந்திரிபகன்று ஞானாகாரமயமாவிளங்கின்-விருத்தியைச்சீவனை விடயத்தினையறியுஞ்சாட்சி. எ-து. விருத்திஞானத்தையுஞ் சிதாபாசனையும் விஷயத்தையும் விலக்காநின்றறிதற்குரிய இருவகைசாட்சியுந்தானாகி-வேந்தனசையாதிருந்து மேன்மைபெறுந்திறம்போல். எ-து. திரிலோகத்தையும் ஒருங்குவென்ற அரசன் தனதிடத்தை விட்டசையாதிருந்து எல்லாச்சிறப்பையும் அடையுந்திறமெங்ஙனமோ அதுபோல-விருத்திவிடயஞ் சீவன்சாட்சி யிவைதோன்ற விபுவாவன் ஞானியெனவிளம்பு முபநிடதம். எ-து. விருத்திஞானத்தையும் விஷயங்களையுஞ் சீவனையு மிருவகைசாட்சியையு மிங்ஙனமாய நிலையினவெனத் தோன்றவொட்டாத விபுவாக விளங்குவன். இங்ஙனமாயினோனை முப்பத்திரண்டு உபநிடதங்களும் ஞானியெனக்கூறுநிற்கும். எ-று. ஓர்பிரக்ஞையே பகிர்முகத்தில் அஞ்ஞானியெனவும், ஏகதேசியெனவுஞ் சிதாபாசனெனவும் நின்றாற்போல அந்தர்முகத்தில் ஞானியெனவும், விபுவெனவும், சாட்சியெனவும் நின்றதெனவறிக. அதோமுகத்தில் விடயாஞ்ஞானத்தை அகற்றலாவது; அதிஷ்டானநாட்டமின்

மையால் தத்துவசோதனைசெய்து தெளிந்ததுபோற்காண்டலை. விடயாகாரமதாதல்; தனதுபிராந்தியெனத்தேராமையை. ஊர்த்தமுகத்தில் விடயாஞ்ஞானத்தை அகற்றலாவது; அதிஷ்டான நாட்டஞ் சற்றுண்மையால் தத்துவசோதனை செய்து தெளிந்துநிற்றலை. சத்தாகாரமதாதல்; தனதுபிராந்தியெனத்தேர்ந்ததை பகிர்முகத்தின்கண்ணும் அந்தர்முகத்தின் கண்ணும் பகுத்துணர்வு இருத்தலினானும் அதனாலவ்வவற்றுலாய பயனனுபவிப்பா னிருத்தலினானும் விருத்தியெனவும் சீவனெனவும், சாட்சியெனவும் பெயர்தந்தவாறுகாண்க. விருத்தியுஞ் சீவனும் விடயத்தினைப்பார்க்கில் பெரிதாமென்ற விதப்பால் விருத்தியுஞ் சீவனும் ஞானத்தினைப்பார்க்கில் பெரிதாமெனக்கொண்டாம். அங்கே விருத்தியுஞ் சீவனும் விடயமயமாதல்போல் இங்கே ஞானமயமாதற் கியைதலின் முரணென்னை. இன்றாதலிற் பொருந்தும். நூலாசிரியர் அங்ஙனங் கூறாதிருக்கில் யாமிங்ஙனம் உரைகொள்ளாதிருக்குதுமென்க. (௯)

10

## விஷயமுதல் சாட்சிவரையில் ஒன்றற் (கொன்று விசேடமாமாறு.)

போற்றியவிந் திரியமின்றி விடயமெலாந் தோன்றா
பொறிகளைந்துங் கரணமின்றிப் பொலிவொடுதோன்
றாவால், சாற்றுகர ணமுஞ்சீவ னின்றியக்காற் றோன்
றா சாட்சியன்றிச் சீவனிலை தானுணர்வு தோன்றா,
தாற்றலினா லிந்தியங்கள் விடயமட்டு மறியு மவ்விரண்
டுங் கரணமறிந் திடுமவைமூன் றினையுந், தேற்றமொடு

சீவனறி வுறுமவைநான் கினையுந், தெளிந்தறியுஞ் சாட்சியதீ தப்பொருளா மிதுவே.

(இ-ள்) போற்றிய விந்திரியமின்றி விடயமெலாந்தோன்ரு பொறிகளைந்துங் கரணமின்றிப் பொலிவொடு தோன்ரு. எ-து. யாவரானுந் துதித்தற்கியைந்த ஞானேந்திரியங்களைந் துமின்றிச் சத்தமுதலிய சகலவிடயங்களுந் தோன்ருவாம். அந்த ஞானேந்திரியங்களைந்தும் அகக்கரணமாகிய மனமென் பதில்லாமல் விளக்கமாகத்தோன்ருவாம்—சாற்றுகரணமு ஞ் சீவனின்றியக்காற் ருேன்ருசாட்சியன்றிச் சீவனிலை தானுணர்வுதோன்ருது. எ-து. சொல்லப்பட்டமனமுதலிய கரணங்களுஞ் சீவனில்லாவிடத்துத் தோன்ருவாம். அந்தச்சீவனிலையாகிய வுணர்வுஞ் சீவசாட்சி இல்லாவிடத்துத் தோன்ருவாம்—ஆற்றலினுலிந்தியங்மள் விடயமட்டு மறியுமவ்விரண்டுங் கரணமறிந்திடுமவை மூன்றினையுந் தேற்றமொடு சீவனறி வுறுமவை நான்கினையுந் தெளிந்தறியுஞ் சாட்சி யதீதப் பொருளாமிது. எ-து. அவ்வவற்றின் வலிமைத்திறமிங்ஙனமிருப்பதால் ஞானேந்திரியங்களைந்தும் விடயமாத்திரமுணரும். விடயம், இந்திரியமாகிய விவ்விரண்டை மாத்திரம் அந்தக்கரணமறியும். விடயம், புறக்கரணம், அகக்கரணமாகிய மூன்றைமாத்திரம் தெளிவோடு சீவனறியும். விடயம், புறக்கரணம், அகக்கரணம், சீவன், ஆகிய நான்கைமாத்திரம் சீவசாட்சியாகிய சுயஞ்சைதன்யம் மிக்கதெளிவோடறியும். இதனின்மேலாய நிலைவேறின்மையின் இதுவே அதீதப்பொருளெனப் படுவதாம். எ-று. ஆல்-அசை. இதுவே என்பதில், ஏகாரம் தேற்றம். எவ்வெவ்வுயிரும் போகம் நுகர்தற்கியைந்த நேராய கருவிஞானேந்திரியமாதலின் போற்றியவிந்திரிய

மென்றார். அந்தந்தப் பகுத்துணர்வின் வலி யினையவெனக் கூறவே, சிவசாட்சி யொன்றாலறியப்படுவ தல்லவென்பதா யிற்று; ஆகவே; தானேதானாயநிலையெனக்கண்டாம். தன்னை ஒன்றாலறியப்படுவ தின்மையின் தனக்குத்தானே விசேடமா மென்றுணர்க. இதுவே தீர்ந்தநிலையாதலின் இங்ஙனங்கூறினு ரென்க. தானேதானாயநிலையாதற்கு இதுவுமோர்தந்திர யுத்தி. தோன்றுமென்னு நான்கெதிர்மறை வினைமுற்றும்; இருக்கினுமென்பதைக் குறிப்பிக்கின்றது, அறியுமென்னும் நான்குடன்பாட்டுவினைமுற்றாலென்க. இதனால் தோற்றுதல் திரிசியத்திற்கும் அறிதல் திருக்குவிற்கும் புடைபெயர்ச்சியே னுஞ் சாட்சியாகிய கூடஸ்தவிளக்கத்தில் சற்றுமின்றென்ப தாயிற்று, திருக்குதிரிசியந்தானாயிருத்தலால். (கo)

## (அவஸ்தாத்திரிய சாட்சியி னியல்பு நிலைமை.)

ஈ கற்பனைசெய் யவத்தைகண் மூன் றினுக்குஞ் சாட்சி
கலந்தொருதன் மையினிலகுங் காட்சி கூறிற்
சிற்பரவுஞ் சாக்கிரத்திற் சாட்சி தானே
செகசாட்சி யாயிருக்குந் தியக்க மான
சொற்பனத்தின் மனோவிருத்தி தனக்கே சாட்சி
சூனியமாஞ் சுழுத்தியிலஞ் ஞான மான
வற்பநெறி யானந்த மதற்கே சாட்சி
யனைத்தினுமிவ் வாறிருந்தோர்ந் தறியுங் காணே.

(இ - ள்.) கற்பனைசெய்யவத்தைகண் மூன்றினுக்குஞ்சா ட்சிகலந்தொருதன்மையினிலகுங் காட்சிகூறில். எ-து. கற் பனைகளைவிளைவிக்கத்தக்கசாக்கிரமுதலிய மூன் றவஸ்தைகட்

குஞ் சாட்சியாகிய கூடஸ்தசைதன்யம் இம்மூன்றினு முபா தானமாகக்கலந்து ஒருபடித்தாச்சதோதயமா நின்றுவிளங் குஞ் சுவானுபூதிக் காட்சியைக் கூறுமிடத்தில்—சிற்பரவுஞ் சாக்கிரத்திற் சாட்சிதானே செகசாட்சியாயிருக்கும். எ-து. அறிவுவியாபித்திருக்குஞ் சாக்கிராவஸ்தையின்கண் அந்தக்கூடஸ்தசாட்சியே அங்கேதோற்றுஞ் சகத்திற்குச்சாட்சியாயிருக்கும்.—இயக்கமான சொற்பனத்தின் மனோவிருத்திதனக்கே சாட்சி. எ-து. கலக்கமாநின்றுள்ள சொப்பனத்தின்கண் அங்கே தோற்றும்மனோவிருத்திக்குஞ் சாட்சியாயிருக்கும்—சூனியமாஞ்சுழுத்தியி,லஞ்ஞானமான வற்பநெறியானந்தமதற்கேசாட்சி. எ-து. சூனியமாநின்றுள்ள சுழுத்தியின்கண் அங்கே தோற்றும் முழுதும் மூடமயமான அற்பநெறியாலெய்திய மஞ்ஞானந்தத்திற்குஞ் சாட்சியாயிருக்கும்.—அனைத்தினு மிவ்வாறிருந்தோர்ந் தறியுங்காண். எ-து. இதுபோல வனைய அவஸ்தையின்கண்ணு மாங்காங்கு ஜெகம்போலத் தோற்றுந் தோற்றங்களினிடத்து மிப்படியாக விருந்து அந்தந்தநிலைகளை ஐயந்திரிபறநின்று அறியும் இதனை அநுபவித்துக் காணுதி. எ - று. ஏ-அசை. யானெனதல் லவற்றை, யானெனதாகக் கோடலைக் கற்பனைசெயலென்றார். சாக்கிரமுதலிய மூன்றவத்தைக் கண்ணுஞ் சாட்சிகலந்தொரு தன்மையினிலகுங் காட்சியாவது ; அலைதிவலைமுதலியவைகள் தோன்றி மறைதற்கும் அதுவது வாதற்கு மாதாரமாயுமுபாதானமாயும் நிற்பது சமுத்திரமெங்ஙனமோ அதுபோலச் சாக்கிரமுதலிய அவஸ்தைகளும் தூலம் சூக்குமங் காரணமென்னு முபாதிகளும் விஸ்வதைசத பிராக்ஞனென்னு மபிமானங்களும் விடாதுதோன்றித் தோன்றி மறைதற்கு ஆதாரமாயுமுபாதானமாயும் நிற்றற்கொன்றிருக்க வேண்டுமே. இதனறி

